விவசாய அதிகாரிகளும் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். அப்படி இருந்தும், அந்த மாவட்டத்தை இரண்டாகப் பிரிக்கும் யோசனையை இன்னும் நடைமுறைக்குக் கொண்டுவராததற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஜில்லாப் பிரிவினை வேறு விஷயம், அதிக அதிகாரிகளை நியமிப்பது வேறு விஷயம். சில துறைகளைச் சேர்ந்த ஜில்லா அதிகாரிகள் சில ஜில்லாக்களில் ஒன்றுக்கு மேற்பட்டவர்களாக இருப்பது அந்த அந்த ஜில்லாக்களில் அந்த அந்தத் துறைகளில் உள்ள வேலை அளவைப் பொறுத்தது. முன்பு ஜில்லாவிற்கு ஒரு கல்வி அதிகாரியை வைத்துக்கொண்டே எல்லாப் பள்ளிக்கூடங்களையும் நிர்வகிக்க முடிந்தது. இப்போது அதிகமான பள்ளிக்கூடங்கள் ஏற்பட்டிருப்பதால் இரண்டு கல்வி அதிகாரிகள் தேவைப்படுகிறார்கள். சில ஜில்லாக்களில் மூன்று கல்வி அதிகாரிகளைப் போட்டிருக்கிறோம். அதற்கு, அந்த ஜில்லாக்களை மூன்றாகப் பிரிக்கப்போகிறோம் என்று அர்த்தமில்லை. அதே மாதிரி விவசாயத் துறையிலும் அதிக வேலை இருப்பதால் சில ஜில்லாக்களில் ஒன்றுக்கு மேற்பட்ட விவசாய அதிகாரிகளைப் போட்டிருக்கிறோம். ஜில்லாக்களைப் பிரிக்கும் திட்டம் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. எந்த எந்த ஜில்லாக்களை முதலில் பிரிக்கவேண்டுமோ அவைகளை முதலில் பிரிப்போம். அவைகள் பரீட்சார்த்தப் பிரிவினைகளாக இருக்கும். அந்தப் பரீட்சார்த்தப் பிரிவினைகளின் அனுபவங்களைக் கணக்கில் எடுத்துக்கொண்டு மற்ற ஜில்லாக்களையும் தகுந்த முறையில் பிரிப்போம்.

SRI M. KALYANASUNDARAM : ஜில்லாக்களைப் பிரிவினை செய்வது சம்பந்தமான யோசனைகள் குறித்து இறுதியாக முடிவு செய்வதற்கு முன்பாக அவைகளை சர்க்கார் இந்த சபையில் சமர்ப்பித்து சபையின் ஆலோசனைகளையும் பெற்று முடிவுசெய்வார்களா ?

MR. SPEAKER : I would like to draw the attention of the hon. Member to Question No. 689 on which he can put his supplementary question.

SRI M. C. MUTHUKUMARASWAMY : சில ஜில்லாக்களில் இருக்கும் வேலை அளவிற்குத் தகுந்தபடி உள்ள குறைகளை நீக்க அதிகாரிகள் ஒருவரோ, இருவரோ, மூவரோ நியமிக்கப்படுகிறார்கள் என்று கனம் அமைச்சர் கூறினார். எல்லாத் துறைகள் தலைமை ஆபீஸ் சென்னையில் உள்ளதால் அவைகளையும் பிரித்து வெளி ஜில்லா தலை நகரங்களில் நிறுவ அரசாங்கம் முன் வருவார்களா ?

MR. SPEAKER : 689-வது கேள்விக்கு உப. கேள்விகளை போடும் போது இந்தக் கேள்வியை கனம் அங்கத்தினர் போடலாம்.

SRI A. GOVINDASAMY : தென்னாற்காடு மாவட்டத்தைப் பிரிக்கும் போது, புதிய மாவட்டத்திற்கு விழுப்புரம் மத்தியத்திலிருப்பதால் விழுப்புரத்தை அந்த மாவட்டத்தின் தலைநகரமாக அரசாங்கத்தார் அமைப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர்கள் ஸ்ரீ கோவிந்தசாமியும் ஸ்ரீ எம். ஜெகன்னாதனும் இது சம்பந்தமாகச் சேர்ந்து பேசி ஒரு தீர்மானத்திற்கு வந்த பிறகு, அத் தீர்மானத்தை சர்க்காரிடம் தெரிவித்தால் சர்க்கார் இந்த யோசனையைக் கவனிக்கலாம்.

*Army Store for Madras*

* 682 *Q.*—MR. SPEAKER : As the hon. Member Sri Chandrasekharan is absent, the question and answer will be printed in the Official Proceedings.

29th October 1958]

SRI W. P. A. R. CHANDRASEKKARAN : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

சென்னையில் ஒரு (Army Store) நிறுவுவதற்கு ராஜ்ய சர்க்கார் மத்திய சர்க்காரிடம் தக்க முயற்சி செய்து ஆவனசெய்ய முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : It is not clear what the Member has in mind in referring to 'Army Store'.

*Free travel facilities to students*

* 683 *Q.*—MR. SPEAKER : As the hon. Member Sri T. T. Daniel is absent, the question and answer will be printed in the Official Proceedings.

SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Finance be pleased to state whether any facilities are provided to school children for free travel for educational purposes?

THE HON. SRI C. SUBRAMANIAM : Railway fare and bus fare to parties of students and the teachers leading such parties are being paid.

*Kanjankollai irrigation channel*

* 684 *Q.*—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have received any mahazar, dated 17th February 1958 from the public of Kanjankollai village, South Arcot district, regarding the irrigation channel; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The petition was forwarded to the Collector of South Arcot for necessary action. A report is being called for from the Collector on the action taken by him on the petition. The matter is under correspondence with the Collector.

*Harijan hostels*

* 685 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் பொதுமராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1957–58-ம் வருஷத்திலே எந்தெந்த இடங்களில் தனிப்பட்டவர்களால் நடத்தப்படும் ஹரிஜன மாணவ விடுதிகள் அரசாங்கத்தால் நடத்துவதற்காக எடுத்துக்கொள்ளப்பட்டன ?

(ஆ) 1958-59ம் ஆண்டில் தனிப்பட்டவர்களால் நடத்தப்படும் எந்தெந்த ஹரிஜன மாணவ விடுதிகளை அரசாங்கம் எடுத்து நடத்த திட்டமிட்டிருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : A statement [a] furnishing the information is placed on the table of the House.

---

[a] Printed as Appendix III on pages 82 to 84 infra.